புலியையரைத்துப்பலகாரஞ்செய்துபொருந்துமுகப்
புலியைக்களிப்புடன்சாறுவைத்தாடன்புருடனுக்கே. கக

(புலி-வேங்கை-பொன்) (புலி-மயிர்ச்சாந்து) (புலி-புல்) (புலி-வரி) நெல்) (முகப்புலி-முகத்தாமரை) (சாறு-திருவிழா.)

வேளாமழகன்றுரைசிதக்காதியென்வீட்டிலொரு
நாளாகிலும்வரக்காண்கிலனேயெந்தநாளுமவன்
தோளாலணையுஞ்சுகவாலிபத்தைத்துணிக்கவொரு
வாளாப்பிறந்தனையேமைந்தனேயென்னவாயுனக்கே. கஉ

நடந்தாளொருகன்னிமாராசகேசரிநாட்டிற்கொங்கைக்
குடந்தானசையவொயிலாயதுகண்டுகொற்றவருந்
தொடர்ந்தார்சந்யாசிகள்யோகம்விட்டார்சுத்தசைவரெல்லாம்
மடந்தானடைத்துச்சிவபூசையுங்கட்டிவைத்தனரே. கங

நாலாகலைதெரியேகம்பவாணர்நன்னாட்டில்வளர்
சேலாகக்கண்கள்படைத்தபெண்ணேநின்றிகழும்வயி
றுலாகவுமல்குற்பாம்பாகவுமவ்வணையின்மிசை
மாலாகயான்பள்ளிகொள்ளவந்தேனுன்றன்மாளிகைக்கே. கச

அரவிந்தநண்பன்சுதன்றம்பிமைத்துனனண்ணன்கையில்
வரமுந்தியாயுதம்பூண்டவன்காணுமற்றங்கவனே
பரமன்றிகிரியையேந்தியமைந்தன்பகைவன்வெற்பை
உரமென்றெடுத்தவன்மாற்றான்றன்சேவகனெண்டொடியே. கரு

சங்கரன்றேவிதமயன்மனைவிதனக்குமுன்னும்
மங்கையரேறியவாகனங்காணுமற்றங்கவளோ
கொங்கைகளீரைந்துடையவளாயிக்குவலயத்தில்
எங்குந்திரியும்வயிரவனூர்தியென்றேநினையே. கசு

மாத்தானைப்பித்தனைமாடேறுவானைமதகரித்தோல்
போர்த்தானைவேதப்பொடிபூசுவானையிப்பூதலத்தென்
ஆத்தாளுடனெதிர்த்தம்பலத்தேயென்றுமாடிநிற்குங்
கூத்தாடிப்பையலுக்கோமகளேமயல்கொண்டனையே. களஎ

கானவர்தான்றினைகொய்தனரோகண்டகண்ணலவோ
தேனமர்வண்டினங்காள்கிள்ளைகாள்செழுங்கானைவிட்டுப்
போனவன்றானல்லவோநெடுங்கானிப்புனமல்லவோ
நானவன்றானல்லவோசொல்லவேண்டுநடுக்கண்டதே. கஅ

தாராளனெங்கடிருநின் றைச்சேடன்சயிலத்தின்பால்
நீரார்முகிற்குழற்பெண்பேதையைவிட்டுநீபிரிந்தால்
சீராமனில்லையமுதில்லையஞ்சனைச்செல்வனில்லை
காரார்பொழில்வளர்காழிப்பிரானில்லைகாப்பதற்கே. ககூ

அம்பளவெவ்வளவவ்வளவேவிழியார்ந்தகொவ்வைச்
செம்பளமெவ்வளவவ்வளவேயிதழ்சீர்கொள்வஞ்சிக்
கொம்பளவெவ்வளவவ்வளவேயிடைகூறெனுமிச்
சம்பளமெவ்வளவவ்வளவேதனந்தையனுக்கே. உ0

நச்சணிகண்டத்தாரூர்த்தியாகர்நளினவெற்பில்
கச்சணியும்முலைமாதேயிதுவென்னகாரணமோ
அச்சுதனுமத்திரண்டாமெழுத்திலரையெழுத்தில்
வச்சிரபாணிமனையாள்பகைவந்துவாய்த்ததுவே. உக

அச்சுதன்-அரி-இரண்டாமெழுத்து-ரி-அதில்-அரையெழுத்து
பாதிரி-வச்சிரபாணி-மனைவி-சசி-சந்திரன். (பகை-பாம்பு.)

போமேபொழுதுவருமேமதியம்புரண்டெனங்கம்
வேமேமதனன்சரந்தைக்குமேதைத்தபுண்வழியிற்
பூமேவுதென்றல்புகுமேயென்பெண்புத்திபோய்விடுமே
கோமேதகப்புயலேமழவாபள்ளிகொண்டவனே. உஉ

பாலினுமின்சொற்குயிலினுமென்மொழிப்பாவைநல்லாண்
மேலினுங்காமன்சரந்தைக்குமேவடவேங்கடம்விட்
டாலினும்வேலைநடுவினும்பாம்பினுமாத்தூரத்துங்
கோலினுங்கண்வளர்வாய்மழவாபள்ளிகொண்டவனே. உ௩

மெய்யினுநல்லவர்னம்பொரூர்மயிர்வீழ்தொடக்கம்
செய்யினுமானக்கவரியுய்யாசிற்றினக்கயவர்
வையினும்வாழ்வர்தகரையக்காதுமயிருமொக்கக்
கொய்யினும்பின்செலுமேமழவாபள்ளிகொண்டவனே. உச

மாலாக்கியென்னைப்பெருவயதாக்கியென்மார்பின்முலை
பாலாக்கியங்கம்பசுநரம்பாக்கியப்பாவையரை
மேலாக்கிச்சிக்குவிளக்கெண்ணெயாக்கியென்மேனியெங்கும்
தோலாக்கவோமகனேபிள்ளையாய்வந்துதோன்றினையே. உரு

சதிராயிருந்தரதிமாமிமன்மதன்சற்பனைசெய்
தெதிராளியாயைங்கணைதூவவானத்திருந்துகனல்

ஏதிவாரிவீசவினாவைமறந்துமதிமயங்கிப்
பதினாயிரங்கொட்டைப்பாக்காயிருந்தனள்பைங்கொடியே. ௨௬
பதினாயிரங்கொட்டைப்பாக்கு-அம்மணம்.

அன்பட்டதிக்கெங்கும்போற்றுந்தென்கோட்டுக்கதிபதியாய்
பொன்பட்டஞ்சூடும்ரகுநாதபூபவிப்பூதலத்தே
நின்பட்டமேபட்டநீயேதுரைமற்றிந்நீணிலத்தோர்
தன்பட்டமென்பட்டந்தோலாலடிபடுந்தம்பட்டமே. ௨௭

சேமன்புதல்வன்செழுங்குன்றவேலன்செழுங்கிரியில்
காமன்பகைவன்கரிமுத்துமாகினங்கைவலவா
பூமன்கணையுமதியுமிவ்வாடையும்பூசலிட
மாமன்றமையன்றகப்பனென்றேவஞ்சிவாடுவளே. ௨௮
(சேமன்-இடபவாகனன்) (காமன்-கரி-இந்திரனூர்தியாகிய-மேகம்) (மாமன்-நகுலன்-அவன்தமையன்-தருமன்.)

சூலேறிச்சங்கமடவார்குடையுந்துறைக்கொதுங்கி
வேலேறுங்கண்ணியர்கைக்குடநீர்புக்குமீண்டுமுழுச்
சாலேறிமுத்தந்தனையீனுந்தண்வயலூரனம்பால்
மாலேறுவான்பரிமாவேறினானடிமாமயிலே. ௨௯

பாட்டுக்குப்பாத்திரநல்லோரைப்பாடிப்பதம்பெறலாம்
மோட்டுக்குலாமரைப்பாடிலென்னாமுழத்துண்டமுண்டோ
வீட்டுக்குச்சோற்றுக்குண்டோவெள்ளைவாய்க்கொருவெற்றிலையோ
எட்டுக்குச்சேதங்கண்டாய்வெள்ளைநாவலிருப்பவனே. ௩0

கெலிக்குஞ்சிங்கத்துக்கும்யானைக்கும்வெற்றிக்கெருடனுக்கும்
வலிக்குறுசிங்கியரவுக்குநண்டுக்கும்வன்கவிக்கும்
புலிக்குஞ்செம்மானுக்குஞானிக்குமூடர்க்கும்பூனைக்கும்வீட்
டெலிக்குஞ்சங்காத்தாமுண்டோவெள்ளைநாவலிருப்பவனே. ௩௧

கலங்காதவீரியரானாலும்போகின்றகாலம்வந்தால்
நலங்காமலேவெல்லமாட்டுவரோவிந்தநானிலத்தில்
சலங்காணுங்கோட்டைமதிலேழ்தலைபத்துத்தானிருந்தும்
இலங்காபுரிநின்றதோவெள்ளைநாவலிருப்பவனே. ௩௨

எறிக்குமதிச்சடையண்ணாமலையரெழிற்கிரியில்
பறிக்கின்றபூவைமிதிக்கப்பொருளந்தப்பாதத்தினால்

பொறிக்கண்பிசாசுகணெற்களைத்தூவிப்பொரிபொரித்துக்
கொறிக்கின்றபாலையிலெப்படிபோயினள்கோமளமே. ௩௩

திரைகடலோடித்திரவியந்தேடென்றுசெப்புமௌவை
உரைபழுதன்றெனச்சோர்ந்தாள்கழுக்குன்றத்தோர்மடமான்
அரைபணிநீர்ச்சந்தனங்கொண்டுபொங்கியராற்றியபின்
இரைகடல்போய்வரவெத்தனைநாளென்றெழுந்தனளே. ௩௪

மேகம்பிறைசிலைவேல்குமிழ்வள்ளைவெண்முத்தந்தொண்டை
பூகம்பசுங்கணைதேனுமிழ்கீர்ந்தள்பொற்பாலிலைநூல்
நாகங்கதலியலவன்வரானன்னளினமுண்டு
மாகம்பொழிற்றிருத்தில்லையிலேயொருவல்லியிலே. ௩௫

இளந்தத்தையேநல்லமுதத்தையேபுசித்தென்கரத்தில்
வளர்ந்தத்தையாதுமுணர்ந்திலையேமயலாகிமனந்
தளர்ந்தத்தையேயென்றிருவரங்கேசர்க்குச்சாற்றச்சொன்னால்
அளந்தத்தையேயளந்தாய்பிள்ளையாதுமளந்திலையே. ௩௬

ஆயத்துறையிற்பிறந்துவந்தந்தணர்பால்குடித்து
மாயக்கண்வேசையிடத்தேவளர்ந்துவண்ணானொருநாள்
ஏயப்புலவரிடத்தெட்டுநாள்செட்டியேனென்றுபின்
போயக்கசாலைபுகுந்தனள்காணந்தப்பொய்மகளே. ௩௭

பூச்சிலைக்கன்னற்கைச்சேஷாசலேந்த்ரபொருப்பிடத்தே
காச்சியபாலைக்குடிபோவென்றேனந்தக்காரிகையும்
பேச்சிளைத்துக்கள்ளிபின்கைகைராமற்குமுன்சொன்னதாய்
வாய்ச்சுதென்றேநடந்தாள்பாலையானவனந்தனிலே. ௩௮

தோப்பிடுவாரில்லைதென்றல்வராமற்சுடுமதிக்குக்
காப்பிடுவாரில்லைகாமன்வராமற்கருங்குயில்வாய்க்
காப்பிடுவாரில்லைதென்னரங்கேசர்க்கபயமென்று
கூப்பிடுவாரில்லையேவண்டுகொளென்குறைசொல்லியே. ௩௯

அணியார்கடுக்கைநறுந்தும்பைகங்கையறுகுடனே
பணியார்சடாடவிக்கச்சாலைநாதர்பணிவரையில்
தணியாதமாமதப்பேய்பிடித்தாடுமித்தையனுக்கு
மணியாட்டினால்விடுமோசொல்லுவீரிந்தமாநிலத்தே. ௪௰

பாதாதிகேசமுதலாயிவளைப்படைத்தமலர்
வேதாமருங்குல்வெளிவைப்பனோவிரிபூதலத்துள்

ஆதாரமின்றியிரண்டிளநீரந்தரநிற்குமோ
ஏதாகிலுஞ்சற்றங்கில்லாதிராதிடையேந்திழைக்கே. கக

குணமிருந்தாலுங்குலமிருந்தாலுங்கொழுந்தமிழின்
மணமிருந்தாலுமதியிருந்தாலும்வழுத்திடுவங்
கணமிருந்தாலுமொர்காசும்பெறாதுசிங்காரவரைப்
பணமிருந்தாலவர்க்கெல்லாருமஞ்சலிபண்ணுவரே. சஉ

உரகத்திலேகிடப்பான்சக்ரபாணியுயர்ந்தகும்ப
கரகத்திலேகிடப்பான்குறுமாமுனிகன்னியர்கள்
விரகத்திலேகிடப்பான்காமராஜன்மிகுந்தவெழு
நரகத்திலேகிடப்பான்கொழூமூர்முத்துநாகப்பனே. சந

சேய்க்கறியுண்டசிவன்மேலன்பற்றவன்சீசியவன்
வாய்க்கறியாதவிடக்கானதுமில்லைமாக்கறியுங்
காய்க்கறியென்பதும்வேண்டான்சப்பாரங்கனக்கவிட்ட
நாய்க்கறியும்புசிப்பான்கொழூமூர்முத்துநாகப்பனே. சச

தருநிகரானகரன்செல்வநாளுந்தனழைக்கும்புல்லூர்ப்
பெருவயனூடுதனிலென்னைப்போலொர்பிடாரன்வந்தே
ஒருகுடங்கொண்டொருபாம்பாட்டினனிவ்வுலகினுள்ளே
இருகுடங்கொண்டரைப்பாம்பாட்டுவதென்னவேந்திழையே. சரு

தேனாட்டுமுல்லைத்தொடைப்ரகுநாதன்செழித்தபுகழ்
பூநாட்டுமன்னர்தொழாமலிரார்மணிப்பூணணிந்த
வானாட்டரம்பையர்மண்ணாட்டரசர்மணத்தினுக்குக்
காநாட்டுவரின்கைநாட்டும்வேலினைக்கண்டுகொண்டே. சசா

ஞாயிறுபோய்விழத்திங்கள்வந்தெய்திடநண்ணியசெவ்
வாயனல்தூவப்புதனம்புகாயநல்வியாழம்வர
மேயிருவெள்ளிக்கலைசோரநானுன்னைமேவுதற்குத்
தாய்சனியாகினளேரகுநாததளசிங்கமே. சஎ

ஆடியநாகஞ்சரோருகம்பானுநல்லம்புலியும்
சூடியநாதர்நயனமுமாலம்புஞ்சொற்பனுவல்
பாடியபாலனுமாய்வந்ததால்வெண்பணிலவயல்
கோடியமகோன்சிவந்தான்றிருமார்பிற்குளிர்தொங்கலே. சஅ

சிவந்தான்மாலை-மதனையும்-கடலையும்-அடக்கி-இவளைப் பிழைப்பித்தமையின் பரமசிவன் கண்ணையும் திருமாலம்மையும் சம்பந்தசுவாமிகளையும், ஒத்தது.

முருகார்முளரியுமுள்ளியுமுண்டகமூரியரம்
பொரிகாரிரும்புங்கனகமும்பொன்பொறித்தாரகையும்
குருகாருங்கெண்டையுமீனெனல்போலென்குரிசிலுக்கு
வருகாதலேதந்தமங்கையுநானுமடந்தையரே. சகூ

நரைகோட்டிளங்கன்றுநன்வளநாடுநயந்தளிப்பன்
விரையூட்டுதார்ப்புயன்வெற்பீழமன்னனென்றேவிரும்பிக்
கரையோட்டமீதின்மரக்கலம்போட்டுன்னைக்காணவந்தால்
திரைபோட்டுநீயிருந்தாய்சிங்கபூபசிரோமணியே. ருo

வண்டோவிழிநுதல்வான்பிறையோவல்குன்மான்குளம்போ
செண்டோமுலைநித்திலமோநகையிடைசேர்துடிகற்
கண்டோமொழிகுழல்கரோமுகங்கமலம்பவளத்
துண்டோயிதழ்கன்னித்தண்டோதுடையிந்தத்தோகையர்க்கே. ருக

வண்டுமதுவுண்டிசைபாடுஞ்செந்திலின்மாரன்வரக்
கண்டுமிருந்தும்வடிவேலிரண்டுங்கருப்புவில்லும்
குண்டுமருந்தும்பொற்றேருதராமற்குழலைத்தந்தால்
தண்டுகொண்டெப்படிவென்றிடலாமடிதார்குழலே. ருஉ

ஆலங்குடியர்சங்கஞ்செறியத்தரஞ்சக்கரப்பொன்
மேலம்பரத்தினர்நாகமெடுத்தவர்மேவிடையர்
சூலக்கண்மெய்யினர்பார்பதிகோன்மதிதோய்கவினர்
பாலன்கைக்கோற்படைக்கூர்மைக்கண்ணுமிந்தப்பைந்தொடிக்கே. ருங

ஆமாவிகழ்ந்திடலாமாவினியுனையன்றிவினை
போமாவுனைவிட்டுப்போமாவெனக்கிந்தப்புன்மைவர
லாமாபராமுகமாமாபுயத்தினணிகடப்பந்
தாமாகுகனெனுநாமாவயிற்கரச்சண்முகனே. ருச

ஆக செய்யுள்-அசo.

———

## வெண்பா.

சென்னிமலைவேலவர்க்குச்சேர்ந்தகொம்பிரண்டுண்டு
கன்னிகுறவள்ளிக்குக்காலில்லை-முன்னமே
ஆட்டுக்குக்கொம்பில்லையானைக்குக்காலில்லை
பாட்டுக்குளாராய்ந்துபார். ௧

தார்க்கொன்றைதாவென்றேன்றுவேழிலொன்றென்றான்
ஊர்க்கஞ்சிநான்மூன்றிலொன்றென்றேன்-ஆர்க்கும்
பொதுவென்றான்பூவென்றேன்போயினான்றோழி
இதுவோநம்மீசனியல்பு. ௨

பறவைநாய்நாகம்பகைவிலங்குபங்கம்
செறியுமிருணாஞ்சிதடன்-குறிகிழவன்
என்றுரைத்தவீரைந்துமோர்தண்டத்திற்பண்பாய்
ஒன்றுமெனவுரைப்பரால். ௩

பரியூர்வார்பாலருந்தல்மண்பாமுடற்குக்
கரியூர்வார்பொன்னின்பங்காணல்-விரியும்
சிவிகையூர்வார்க்குமைத்தலின்பஞ்சேட்செல்வார்
பசிவீயவுண்டல்பயன். ௪

தக்கசகுனஞ்சபதஞ்சாமுத்திரியஞ்சொன்
மிக்கவசரீரிகளுவென்றறைந்தும்-இக்கலியில்
கூடினுங்கைகூடிவருங்கூடாதொழிந்தொருகால்
வீடினும்வீடிவிடும். ௫

நக்கனார்சோணகிரிநாதனார்வேள்வியிலே
தக்கனைத்தகர்த்ததக்கனார்-பொக்கைவாய்
ஆக்கினார்சூரியனையம்புலியைத்தேய்த்தரியைத்
தாக்கினாரோடோடத்தான். ௬

ஓடினனென்பதுணர்ந்துமுனக்குச்சரியா
நாடினார்க்கென்னநரகமோ-நீடியே
ஆலவிடந்தோன்றியபோதம்பலவாணாநெடிய
மாலவிடஞ்சஞ்சரியாதே. ௭

அசநமிளைப்பகற்றுதன்னையேநம்பால்
வசனமிதுதவறாவாய்மை-இசைநாகைக்

சின்னப்பால்வெண்மதியஞ்சேரிமையத்தேபிறந்த
அன்னப்பாலிங்குவந்தாலாம் (அன்னப்பால்-பரமசிவன்.) அ

தலையிலிரந்துண்பான்றன்னுடலிற்பாதி
மலையின்மடமகளுக்கீவான்-உலையில்
இருப்புவனமேனியனேயென்றாலோவாமாம்
திருப்புவனத்தீசன்றிறம். ௯

ஆச்சரியந்தென்னமரமத்தனையுங்குத்தாமுலை
காய்ச்சிருக்குந்தென்குடந்தைகாவலா-மாச்சன்
வரக்குப்பையாநீமருவாநாளெல்லாம்
சரக்குப்பையாமேதனம். ௧௦

கல்லுறுத்தாதுகாலின்முட்டையாது
எல்லைமார்த்தாண்டன்சூடேறாது-தொல்லைவரு
மாலையிருளில்வழிநடக்கக்கூசாது
காலிற்செருப்பிருந்தக்கால். ௧௧

தந்தைபோய்த்தாய்போய்த்தமர்போயென்சுற்றமும்போய்
வெந்தபுரியாகிவிட்டேனே-முந்தவே
ஆழாழிநஞ்சுண்டவாபற்சகாயனெனும்
பாழாவான்கண்ணேறுபட்டு. ௧௨

கைக்குடமும்ரெண்டுகனகும்பக்குடமும்
முக்குடமுங்கொண்டான்முறியாதோ-மைக்குழலீர்
வேய்க்காற்றினால்விளங்கும்வீரனந்திமாநகரில்
ஈக்காற்றுக்காற்றாவிடை. ௧௩

வையம்புகழுமலராயிரமெடுத்துக்
கையிலொருமாமலரைக்காணாமல்-வையகத்தில்
செங்கண்மாலீசன்றிருவடிக்கெண்ணாயிரமாத்
தங்கண்மலர்சாற்றினான்றான். ௧௪

பாம்புசேர்தோளிணையாள்பாளயத்துமாமாரி
சாம்பசிவன்றன்னடியைச்சாராரை-வேம்பின்
இலையையுடுத்தியவரீனமானம்போக்கித்
தலையில்விளக்கேற்றிவைப்பாடான். ௧௫

அட்டமியிலோதினாலாசானுக்காகாது
சிட்டருக்குப்பன்னான்குதீதாகும்-கெட்டவுவா

வித்தைக்குநாசமாம்வெய்யபிரதமையில்
பித்தரும்பேசார்பிழை. கசு

ஆயிரம்பாக்கன்னமுலையன்னநடைக்கன்னிபதி
னாயிரம்பாக்கானாளென்னாசையினால்-நீயிரங்கி
வந்தாளவேண்டுமலைப்பழனிவேலவனே
சந்தாளவேறில்லைதான். கஎ

(ஆயிரம்பாக்கு-கலசம்) (பதினாயிரம்பாக்கு-அம்மணம்)

பிறப்பித்தோன்வித்தைதனைப்பேணிக்கொடுத்தோன்
சிறப்பினுபதேசஞ்செய்தோன்-அரப்பெரிய
பஞ்சத்திலன்னம்பகர்ந்தோன்பயந்தீர்த்தோன்
எஞ்சாப்பிதாக்களெனவெண். கஅ

கானக்கடன்மல்லைக்கார்வண்ணன்றானுமால்
நானக்குழன்மடவீர்நானுமால்-ஆனக்கால்
தன்கையிற்சங்காழிதாமிருக்கப்போவதேன்
என்கையிற்சங்காழியின்று. ககூ

கட்டியடிப்போர்க்குங்கண்மீதிலேற்றுவர்க்கும்
எட்டியடிப்போர்க்குமீவரே-திட்டமுடன்
பாடுவோர்க்கீயாரேபல்லுதிரத்தாடையினிற்
பாடுவோர்க்கீவார்பொருள். உO

செய்யாள்கணவாசெகராஜசேகரா
ஐயாவடகங்கைக்காரியா-துய்யா
குடஞ்சுட்டுப்பின்போனகோபாலாமுத்து
வடஞ்சுட்டுக்கண்டுபிலாண்மான். உக

உன்றன்மகளைபொறுப்பதற்குக்காரணமென்
என்றன்மகடனியல்புகேள்-குன்றாச்
சிரப்பளியனேறிவருஞ்சேவின்மணியோசைக்
கிராப்பளியுங்கொள்ளாளிவள். உஉ

நீறாருஞ்செஞ்சடைமேனீறாரும்பாம்பணிந்து
நீறாரிலேவந்தனீதியோ-நேரே
படவரவஞ்சாடப்பலியிடெனவந்தால்
இடவரவஞ்சாளோவிவள். உந

வாலைப்பொருந்துதலால்வல்லரவம்பற்றுதலால்
மாலையடுத்துநெடுவானுறலால்-சோலைதிகழ்
உம்பர்பூசித்தருளுமொற்றியூரன்வரையில்
அம்புலியுநன்கருடனும். ௨௪

அம்மையிலேயேதியடியேனிடர்தீர
இம்மையிலேவந்தென்னையீடேற்றி-மும்மையிலே
எந்தப்பாவஞ்செய்தேனந்தப்பாவந்தீரக்
கந்தப்பாவந்திப்போகா. ௨௫

எழுதரிதுமுன்னமெழுதியபின்னத்தைப்
பழுதறவாசிப்பரிதுபண்பா-முழுதுமதைக்
கற்பரிதுகற்பயனைக்காண்பரிதுகண்டக்கால்
நிற்பரிதுதானங்கிலை. ௨௬

ஏறேறுநீரேறுமெண்ணினுயிர்க்குயிராம்
பாறேறுங்காலாற்படியளக்கும்-வீறேறும்
அன்னங்காணீசனரியயனுந்தாமன்று
துன்னுபுகழ்மாரியப்பாசொல். ௨௭

கோடுதிக்குங்கும்பமுலைக்கோதையரைக்கூடவென்றால்
மாடுதின்னியென்னைமறுத்தானே-மாடுதின்னி
தன்பொழுதும்போச்சுதேதன்னந்தனித்திருந்த
என்பொழுதும்போச்சுதேயென். ௨௮
(மாடுதின்னி-வைக்கோலாற்செய்தமருள்)

நெஞ்சடைந்தவேட்கையெல்லாநீங்கியிருவிழியும்
பஞ்சடைந்துள்ளாவிபடுமுன்னே-செஞ்சடையில்
வெள்ளாறுவெந்நாளும்வேள்விப்புகையாறு
நள்ளாறுவென்னுநவில். ௨௯

மூவர்கவிமுன்னூறுமுன்சோழனைந்நூறு
நாவலர்மாணிக்கர்தலகாற்பத்தெட்-டோவறுசீர்
நூதனசிவாலயங்களூற்றறுபதுங்கூட
ஓதவருமாயிரத்தெட்டோர். ௩0

நாலெழுத்துப்பூநெடுவேகாம்பிருக்கும்
காலுந்தலையுங்கடைச்சாதி-மேலாக

ஒட்டெழுதலெழுத்துமோதாறன்றும்மெழுத்தும்
விட்டார்பரமனுக்குவரிசை(புகையிலை-புலி-கையிலே) ௫௧

முனியதட்டிமுட்டேக்குமுன்னீரலக்கும்
கலியுதிர்க்குங்கவ்வுகாய்காக்கும்-கனிவழிக்கும்
பத்திரமதாக்கும்பயத்தீர்க்கும்பாம்படிக்கும்
கைத்தலத்திற்றண்டிருந்தக்கால். ௫௨

பகலோன்றெறுக்கிரணம்பாய்ப்பறவையெச்சம்
மிகமேனுறுதகற்றும்விண்ணின்-முகிலதனல்
பெய்யுமழைமலையத்தடுக்கும்போருமாமொருவர்
கையிற்குடையிருந்தக்கால். ௫௩

வந்தவிலக்கையாறவாய்முத்தக்கந்தருள்வாய்
தொந்தவிலக்கையாறவாரலையா-சந்தவனே
கோசையிடத்தானேகுவிலோசைக்கஞ்சியுளத்
தாசையிடத்தானேயறிந்து. ௫௪

அறிந்துதவிப்பாரையருள்கோசையான்மால்
செறிந்துதவிப்பாரைத்திருத்தும்-திறந்தமைந்த
வைகுந்தனூர்வாய்மடமனமேகொவ்வைநிகர்
வைகுந்தனூர்வாய்மதித்து. ௫௫

மடுக்குஞ்சரமழைக்குக்கும்வான்கோசைமாலே
விடுக்குஞ்சரமழைக்குமேலாய்-முடிக்கும்
அகங்கலையஞ்சப்கமடுத்தேதலையான்வாய்
அகங்கலையஞ்சக்கமலர். ௫௬

அலரோதிமத்தானறைகோசைமாலே
அலரோதிமத்தாலடிக்கும்-அலரோதி
நந்தனகத்தாருறவேகண்ணினின்றுபானடைக்கேதன்
உந்தனகத்தாறுறவேயோர்ந்து. ௫௭

ஓர்ந்தண்டரையாளுமுத்தமகற்கோசைபனே
சார்ந்தண்டரையாளுமிந்திரையும்-சேர்ந்திலகு
தூயத்திருக்கருப்பாதேதாத்திரியடியேனுடைய
மாயத்திருக்கருப்பாய்வந்து. ௫௮

வானிரங்குழுத்துகிர்ஷ்ணமன்னனமதுதொண்டை
மானிரங்குவானென்றுண்மான். ௪௬

வாரிதரளஞ்சொரியமாமலையிலூறுமருவிச்
சேரனமர்காடளவுஞ்சேர்ந்ததே-மூரிமதன்
அம்போடலைகின்றவாயிழைக்குநீகுதிரைக்
கொம்போகுலோத்துங்காகூறு. ௪௭

தேமிருக்குமாந்தளிரைச்செந்தீவனமென்றும்
பூமுருக்கையத்தீப்பொறியென்றும்-காமிருக்கு
மாப்படுமேயென்றெண்ணிவாடிமனந்தளர்ந்து
கூப்பிடுமேயந்தக்குயில். ௪௮

காமனார்வீட்டினிலேகள்வன்புகுந்தானே
சோமனைப்பாம்புசூழ்ந்ததே-மாமரந்தான்
தீப்பட்டுவேகுதேதியாகேசர்கன்னாட்டில்
கூப்பிட்டதேயந்தக்குயில். ௪௯

செந்தமிழோருப்பவண்புசெப்பவந்தசோழவள்ளல்
சந்தகமுஞ்சேராகாடாழ்குழலே-வந்தனைசெய்
ஐங்கரனைவேலவனையன்றழற்கண்வந்தவனைச்
சங்கரனைவாசகியைத்தான். ௫௦

கருப்புவில்லைமுறிக்க-ஐங்கரனையும், கடலைபடக்க-வேலவனையும் சந்திரனைத்தேய்க்க - வீரபத்திரனையும், மன்மதனையெரிக்க சங்கரனையும், தென்றலையுண்ண-வாசகியையும் வந்தனைசெய்.

முக்கணன்வாழ்வெற்பைமுறித்துவரியிட்டகால்
முக்கணனையப்பில்விழுமோதாதே-முக்கணன்றன்
வேணிக்காகாமலர்வைத்தேகினான்மெல்லியலே
சாணிற்குறைந்தான்றலை. ௫௧

(முக்கணன்வாழ்வெற்பு-மேரு, கால்-காற்று, முக்கணன்-தேங்காய். முக்கணன் வேணிக்காகாமலர்-தாழம்பு, சாணிற்குறைந்தான் - ஓட்டைச்செடி)

சேலநகரேமதுரைசேர்ச்செழியனேசெழியன்
சாலவதிலுள்ளோரேசங்கத்தார்-மேலிதும்
கம்பாலதேவன்கடம்பவனவாசர்
தம்பாரிமீனாட்சித்தாய். ௫௨

மங்கையர்கள் மேயாணிப்பிசைவைத் திருக்குமாசைதனைப்
பங்குசெய்து நூற்றிலொருபங்கெடுத்தக்-கங்கைமதி
வேணியரன்பாதாரவிந்தத்தில்வைத்தக்கால்
காணலாங்காணுக்கதி. ருங

துர்ச்சனரும்பொன்னுந்துடியுந்துரகதமும்
அச்சமறமுன்னிற்குமாயிழையும்-நச்சரவும்
கண்டிருந்தவெள்ளுங்கரும்புமிளநீரும்
தண்டித்தார்க்கல்லோசயம். ருச

புட்டவல்பட்டாணிபொரிதேங்குழலப்பம்
மட்டவிழுந்தோசைவடையுடனே-சட்டமுடன்
ஓயாமற்சோறுகறியுண்டையுண்டையாயடைக்கும்
வாயாகுமச்சிவாயா. ருரு

குச்சிலியமாதர்குயமுங்குவலயத்தோர்
மெச்சுதமிழ்மாதர்வியன்முலையும்-சிச்சீ
தெலுங்கமடமாதர்சிங்காரக்கொங்கைக்
கலிங்கமெனவேசொற்கவி. ருசு

இங்கிருக்கவென்றுலெமனெட்டானிவ்விடம்விட்
டங்கிருக்கவென்றுலையனெட்டான்-எங்குவைத்துப்
பேணுவெனிவ்வுடலைப்பித்தாபிறைசூடும்
தாணுவேசொக்கநாதா. ருஎ

வெள்ளிமலைபொன்னின்மலைமேவமகிழ்வீடாகி
பிள்ளைகளைபுத்திசொலும்பிள்ளைகளாய்-தெள்ளுமுகம்
வாடாவடிவுடையாண்மாமனையாளானக்கால்
ஆடாரோவொற்றியப்பனார். ருஅ

அடியார்க்கெளியன்சிற்றம்பலவன்கொற்றங்
குடியார்க்கெழுதியதைச்சீட்டுப்-படியின்மிசைப்
பெற்றான்சாம்பானுக்குப்பேதமறத்தீட்சைசெய்து
முத்திக்கொடுக்கமுறை. ருகூ

பரமரகசியத்தைப்பாழானவாயால்
இரவுபகலெந்நேரமின்றிக்-குரனெரிபக்
கூப்பிட்டுங்காணுமோகோலமடநெஞ்சேமால்
பூப்பிட்டுங்காணாப்பொருள். சுO

காந்தனுக்கென்றன்கொடியகாமவிகாரமெலாம்
போந்தறிவித்தாலுனக்குப்புண்ணியமாம்-சேர்ந்தோடும்
தேளிபடவாடுந்திரைக்கடலேமன்மதன்கை
வாளிபடவாடும்மனம். சுக

கம்பனென்றுங்கும்பனென்றுங்காளியொட்டக்கூத்தனென்றும்
கும்பமுனியென்றும்பேர்கொள்வாரே-அம்புவியில்
மன்னுவலர்புடைசூழ்வாழ்குடந்தையாரியப்பன்
அந்நாளிலேயிருந்தக்கால். சுஉ

## கட்டளைக் கலித்துறை.

பூமன்றிருக்கண்டியந்தகன்கோவல்புரமதிகை
மாமன்பறியல்சலந்த்ரன்விற்குடிமாவழுவூர்
காமன்கொறுக்கைநமன்கடவூரிந்தக்காசினிக்குள்
தேமன்னுகொன்றைச்சடையான்பொருதிட்டசேவகமே. சுங

## கொச்சகம்.

மெய்ச்சரசமாகவிளையாடும்வேளையிலே
கைச்சரசமென்றதல்லாற்கைச்சரசமென்றேனோ
அச்சனகியார்மீதிலாசைகொண்டராவணனைத்
தச்சுருவவாளிதொட்டதாமோதரேந்திரனே. சுச

மீன்பார்த்துவிண்பார்த்துவேளையும்பார்த்தாள்வரவு
தான்பார்த்தெனைப்போற்சரிபார்க்கும்வெண்குருகே
மான்பார்த்துவாளிதொட்டமால்சிவநாராயணனை
நான்பார்த்துமாதர்நகைபார்த்திருந்தேனே. சுரு

முல்லைமுல்லையாய்த்தொடுத்துமோகமதனெய்யவந்த
வில்லைவில்லையாய்நறுக்கிமெல்லமெல்லத்தாராயோ
இல்லையில்லையென்றுசொல்லியேற்கவரும்பாவலர்கள்
தொல்லைதவிர்க்குங்களந்தைச்சுப்ரமண்யபூபதியே. சுசு

ஆயிரங்கண்ணுகமதனம்புமேலம்புவிட
வீயிரங்குசெந்தேனிருலினங்கமானேனே
தாயிரங்கவேணபெண்கடாமிரங்கவானிரங்க
வேயிருக்கும்வாயாவிசயரகுநாயகனே. சுஎ

கன்னலெனுஞ்சிறுகுருவிககனமழைக்காற்றுமல்
மின்னலெனும்புழுவெடுத்துவிளக்கேற்றுங்கார்காலம்

மன்னவனுந்தென்மதுரைமாவலிவாணனைப்பிரிந்திங்
கென்னபிழைப்பென்னவிருப்பென்னநகைப்பின்னமுமே. சஅ

ஆக-செய்யுள்-கூ0அ.

---

## விருத்தம்.

கைத்தலத்தழற்கணிச்சிவைத்திடப்புறத்தொருத்தி
    கட்கடைப்படைக்கிளைத்ததிறலோராம்
முத்தலைப்படைக்கரத்தெமத்தர்சிற்சபைக்குணிற்கு
    முக்கணக்கருத்தொருத்தர்மொழியாரோ
நித்திலத்தினைப்பதித்தகச்சறுத்தடிக்கனத்து
    நிற்குமற்புதத்தனத்தினிடையேவேள்
அத்திரத்தினைத்தொடுத்துவிட்டுநெட்டயிற்கணத்த
    லக்கணுற்றிடச்செய்விக்குமதுதானே. க

கருப்பாலேபணையடித்துப்பனிநீர்தேக்கிக்
    கதலிபலாக்கனியதனுல்வரம்புகட்டும்
திருப்பாலைவாழீசர்பவனியாடுந்
    தெருவிற்பால்விலைபகர்சிற்றிடைச்சியாரே
அருட்பாலோபொருட்பாலோகாமப்பாலோ
    ஆழிதனைக்கடைந்தெடுத்தவமுதப்பாலோ
இருப்பாலேமனம்படைத்தீர்நில்லீர்செல்லீர்
    எந்தப்பால்விற்கவந்தீரியம்புவீரே. உ

பூப்பார்த்துப்புகழ்பார்த்துப்பொருள்பார்த்துக்
    கவிதைசொல்லும்புலவோர்தங்கள்
நாப்பார்த்துக்கொடைகொடுக்குநல்லதம்பி
    தந்தசொக்கநாதாவென்றால்
காப்பாற்றமுடியாதுகையிலொருகாசுமில்லை
    கடனென்றாலும்
பார்ப்பார்த்திசோறிடுவாளிருந்தாலுமுறங்கமதப்
    பயலொட்டானே. ந

கெட்டசாறுதவிடுகஞ்சிகிருமியுண்டமாவறைக்
    கீரைவேர்தெளிந்தமோர்முறிந்தபாகுகிண்டிமா
இட்டசோறுகொழியலுப்பிடாதபுற்கையாயினும்

எங்குமன்பதாகநுனுங்கவின்பமாயிருக்குமே
பட்டபாகுபசுவினெய்பருப்புமுக்கனிக்குழாம்
பாலிதங்கடாளிதங்கள்பண்ணியாரவகையுடன்
அட்டபாற்குழம்புகன்னலமுதமோடமுதவினும்
அன்பினோடளித்திடாதவசனமென்னவசனமே. ௪

துங்கவடகயிலாயமுதாலமைந்து
துளுவொன்றுதொண்டைவளநாட்டெண்ணான்கு
தங்குநடுகாட்டிருபத்திரண்டுபொன்னித்
தலநூற்றுத்தொண்ணூறுமலைநாட்டொன்று
கொங்கேழுசிங்களத்திலிரண்டுவையைக்
குளிர்தமிழ்நாட்டிரேழுமேலாஞ்சூலச்
செங்கையார்தலமிருநூற்றெழுபானென்கில்
தென்பாகங்கயிலாயந்திருக்குற்றாலம். ௫

ஓதுமைந்திலொன்றிலைந்திலொன்றுமன்னவன்பிதா
ஊர்திதொட்டவேழின்மீதிலுற்றசாபநிருபனுர்
தாதுகொண்டதாளிமாலைசூடிதம்பிதம்பிசேய்
தன்குடைப்பினவன்மற்றலைக்கிரீடதுவசனுர்
காதனண்பன்றந்தைபாகன்பின்னவன்பகைச்சுமைக்
கலையெடுத்தகையரையர்கதிபெறத்தவஞ்செய்தோன்
தீதிறாதைகொண்டுவந்தசிலைவதிந்தபதியினான்
கிரமரிந்தவன்கோள்பாரிசேரிலானுறைந்ததே. ௬

ஓதும்-ஐந்துபஞ்சபூதம்-அதிலொன்று-நிலம்-அதில்-ஐந்து-ஐந்திணை-அதில் ஒன்று-குறிஞ்சி-அதற்கு மன்னவன் - முருகன்-அவன் பிதா-சிவன்-அவனூர்தி- இடபம்-அதற்கேழ்-விருச்சிகம்-அதன் மீதிலுற்றசாபம்-தனுசு-அதையுடைய நிருபன்-இராமன்-அவன் தம்பி-பனைமாலைசூடிய பலராமன்-அவன் தம்பி-கிருஷ்ணன்-அவன்சேய்-மன்மதன் அவன் குடை-திங்கள்-அதற்குப்பின் ஐவன்-சனி-அவன் கிரீடம்-அரவம்-அதைக்கொடியாக வுடையவன்-துரியோதனன்-அவன் நண்பன் கர்ன்னன்-அவன் தந்தை சூரியன்-அவன்பாகன்-அருணன்-அவன்பின்னவன்-கருடன்-அவன்பகை-ஆதிசேடன்-அவன்சுமை-பூமி-அதன்கலை கடல்-அதை யெடுத்தகையர்-அகஸ்தியர்-அவரையர் - பிரமதேவர்-அவர்கதிபெறத்தவஞ் செய்தோன்-அனுமான் அவன்றாதை-வாயு-அவன் கொண்டுவந்தசிலை-மேருசிகரங்கள்-அவைகளைப் பதியாகயுடையவன்-

இராவணன்-அவன் சிரமரிந்தவன்-திருமால்-அவன்கொள்பாரி-இலக்குமி-இவள்சேர்இல்தாமரைப்பூ-ஆலுறைந்தது-ஆலமாத்தின்கீழிருந்தது (இஃதுபொருண்மேற் பிரிந்ததலைவன் ஆலின்கீழ்வைத்த அலர்க்குறியைக்கண்டு பாங்கி தலைவிக்குணர்த்தியது.

தொடுத்தமுத்தமிழுக் ககத்தியனெனவே தோன்றிய புவனச்சேறையர்கோன், சொலக்கணப்புலவ னிலக்கணக்கவியைத் துதித்தகங்களித்திடுங்களியேம், மடத்தினிற்புகுந்து மதுத்திறந்தவனுர் வடித்தகட்டிகுடித்துநின்றவனுர், வறுத்தசுட்கடித்துக் குதட்டுகின்றவனுர்மயக்கியுட்டியக்கமுற்றவனுர், கடுக்கனைமிடற்றிலொடுக்கியிட்டவனேகையிலேசிலம்பையிட்டவனே, கனத்தநாற்கொடியைநாவிலிட்டவனே கண்ணிலேகுழையையிட்டவனே, முடுக்கியவயிற்றிலாழியிட்டவனே முகத்திருபதக்கமிட்டவனே, முளைத்ததோளொருபான்சதங்கையிட்டவனே, முழுப்புரட்டவர்க்கலாதிலையே. எ

கடுவிஷம்-சிலம்பு-மலை-நாற்கொடி - வாணி-கண்குழை-கட்செவி ஆழி-கடல்-இருபதக்கம்-இருபதுகண்ஒருபான்-சதங்கை-ஆயிரம்-கை.

தேமதுரகவிவிரகன்றெவ்வைவருபெருமான்
செல்வச்சங்கரர்தாளைத்தினம்வணங்குகளியேம்
யாமதுவுண்டானுமஃதுமக்கடிமையிலர்போல்
எமைமயக்குமோமயக்காதினியியம்பக்கேளீர்
வீமன்மகனகத்தியனேகுபேரன்மகன்புதனே
வீருணைமுகனெருவன்விரும்புமகன்குகனே
காமன்மகன்சயந்தனேவேதன்மகன்சிவனே
காலன்பாற்பிறந்தமகன்கடல்கடந்துளானே. அ

வீமன்-பிரமன்-குபேரன்-சந்திரன்-வீருணைமுகன்-வீருன-ஐம்முகன்-காமன்-இந்திரன்-வே-மூங்கில்-கால்-காற்று.

சந்தப்பாவிருத்தப்பாகலிப்பாவெண்பா
தாழிசைப்பாகொச்சகப்பாத்தனிப்பாவுக்கும்
விந்தையப்பாவாகியகிரந்தப்பாவும்
வெல்லப்பாவதுபோலவிகடப்பாவும்
எந்தப்பாவுரைத்திடினுமொருபேறில்லா
ஏதப்பாவிக்குநினதிணைப்பாதத்தைக்
கந்தப்பாமுருகப்பாபோரிவாழ்வே
கையப்பாமெய்யப்பாகாட்டப்பாவே. கூ

ஆதிசிவன்செத்தானோவுமைசெத்தாளோ
ஐங்கரனுஞ்செத்தானோவரிசெத்தானோ
வேதியனுஞ்செத்தானோநீசெத்தாயோ
வெட்டவெளியானந்தம்வெறும்பாழாச்சோ
நாதியற்றுப்போனையோவழிகாட்டாயோ
நாயேனுக்கிரங்கிவந்துநலந்தாராயோ
பாதிவழிதனிலவதிப்படுத்துவாயோ
பாதகாதிருச்செந்தூர்ப்பதியுள்ளானே. கO

நீருஞ்சுமந்தேன்விறகெடுத்தேனித்தஞ்சுமந்தேன்சாணங்கம்
நிகழவடிபட்டுதைப்பட்டேனின்றேன்வையைக்காளாக
ஆரும்விரும்பாத்துகிலெடுத்தேனழகுமேனிகரிக்கோலம்
ஆனேனதனலல்லோவுன்னடியானுனக்குச்சரியானேன்
காரும்விரும்புங்கடுவணிந்தகளனேகருணைப்பெருங்கடலே
கமலத்தயன்மால்காணுதகாலகாலாவென்றுயரம்
தீரும்படிதண்ணருள்புரிவாய்சிவனேயமரர்க்கொருவிருந்தே
தேவேதெய்வமறைப்பொருளேதிகழுங்கடவூர்ச்சேவகனே. கக

## காளமேகப்புலவர் பாடியது.

ஏறுகட்டியகொட்டிலரங்கமேயீரிரண்டுமுகன்வாயிலாயமே, மாறு கண்ணப்பன் வாய்மடைப்பள்ளியே வாய்த்தவோடைதிருமால்வதனமே, வீறுசேர்சிருத்தொண்டனில்லாளுந்திவெட்ட நற்கறிகாய்க்கின்ற தோட்டமே, நாறுபூம்பொழில்சூழ்தில்லையம்பல நாரிபாகற்குநாடகசாலையே. கஉ

## நடுவெழுத்தலங்காரம்.

திருமால்வாகனநாவாயிராசியொன்று
சினைதெவிட்டார்மாதுலன்கோகிலமிவ்வேழின்
உருவாமேழெழுத்திநடுவெனக்குச்செய்தான்
உகந்துபதினன்கனையுந்தானேகொண்டான்
ஒருபாகத்திருத்தினன்கையிலேற்றான்
ஒருமதலைதனக்களித்தானுண்டான்பூண்டான்
பரிவாயொண்கரத்தமைத்தானுகந்தானிந்தப்
பைம்பொழிற்றில்லையுளாடும்பரமன்றானே. கங

திருமால்வாகனம்-நாகாரி-நாவாய்-கலம்-இராசி-கன்னி-சினை-கவடு-தெவிட்டார்-ஆரார்-மாதுலன்-மாமன் - கோகிலம்-பல்லி-இவற்றின்-நடு

வெழுத்துக்கள் காலன்வராமல்இவற்றின் எனையவெழுத்துகளின்பயன்
நாரிஉமை (கம்-கபாலம்) (கனி-பழம்) (கடு-விஷம்) (ஆர்-ஆத்தி)(மான்)
(பலி-பிச்சை.)

கூற்றுவனைவின்மதனையரக்கர்கோவைக்
கூனிலவைக்குஞ்சரத்தையிஞ்சிமூன்றை
ஏற்றுலகின்புறவுருவமாளத்தோள்க
ளிறவெறிப்பவிமையப்பெண்வெருவவேவக்
காற்றொழிலானயனத்தால்விரலாற்கற்றைக்
கதிர்முடியாற்கரதலத்தாற்கணையாற்பின்னும்
ஊற்றழியவுதைத்தெரித்துநெரித்துச்சூடி
உரித்தெரித்தானவனென்னையுடையகோவே. ௧௪

பொன்னனைவாளரக்கனைநூற்றுவரைக்காவைப்
பொருசிலையைக்கனைகடலைப்பொன்னனின்ற
நன்மகற்காய்ச்சுரர்க்காயைவ்வருக்காய்க்காதல்
நட்பினுக்காய்ச்சானகிக்காய்நடவைக்காக
மன்னுகிறல்வடிக்கணையால்வளையாற்புள்ளால்
வயங்குதோள்வலியால்வானரங்களாலும்
உன்னுடற்கீறிச்சிரங்கொண்டமரில்வீழ்த்தி
முதலொடுங்கொண்டிறுத்தடைத்தமோகூரானே. ௧௫

இந்துமுடிக்குஞ்சடையாளரிருக்குந்தொண்டைவளநாட்டிற்
சிந்துபடிக்கக்கவிபடிக்கத்தெரியாமடவாயுன்றனக்குக்
கெந்தப்பொடியேன்பூமுடியேன்கிழமாய்நரைத்துமுகந்திரைந்தும்
இந்தமுறுக்கேன்வீறுப்பேனெடுப்பேனுன்னைக்கொடுப்பேனே. ௧௬

ஏழாளையடித்தபுலிதனையடித்தான்வீரசென்னனென்றேகாட்டில்
வாழாமற்சிறுபுலிகளீப்புலியோடெலிப்புலியாய்வடிவங்கொண்டு
பாழாகிக்காடெல்லாம்பரதவிக்கவடுகரடுப்படியில்வந்து
கூழாகிவயிற்றினிற்போம்பொழுதுகுணம்போகாமற்குமுறுந்தானே. ௧௭

## கட்டளைக் கலித்துறை.

காவென்றுஞ்சிந்தாமணியென்றுஞ்சொல்லியென்கையிலள்ளித்
தாவென்றுகேட்கத்தரித்திரம்பின்னின்றுதள்ளியென்னைப்
போவென்றுரைக்கவுநாணமங்கேயென்னபோவதிங்கு
வாவென்றிழுக்கவும்வந்தேன்விராலிமலைக்கந்தனே. ௧௮

## கொச்சகம்.

காரென்றுபேர்படைத்தாய்ககனத்துறும்போது
நீரென்றுபேர்படைத்தாய்நெடுந்தரையில்வந்ததற்பின்

கட்டிறலைத்திருப்பிவைத்தாற் றலைவலிபோமோ வந்தக்கதைபோ லொட்டிக், குட்டியிதென்னடீ சகியேகெட்டிவயித்தியன் பள்ளிகொண் டான்பாம்பின், பெட்டியினுக்கையிடுவனுண்டையும் பாய்ச்சிடுவனன் றும்பிலமாய்க்காயன், கட்டிடுவனினித்தல்லாலாறாதே மதன்விடும்பகழிப் புண்டானே. ௨௭

மாமதுமாத்திலேறிமாமதைத்தோளில்வைத்து
மாமதுமாத்தைக்கண்டுமாத்தினுன்மாத்தைக்குத்தி
மாமதுவழியேசென்றுவளாமனைக்கேகும்போது
மாமதுகண்டமாதர்மாமுடன்மாவெடுத்தார். ௨௮

இராமசாமிக்கவிராயர் பாடியது.

மாலைதனைப்புனைந்தானுமலரணையிற்படுத்தானுமருவார்பன்னீர்
ஏலமுறத்தெளித்தானுமெவ்வளவேனுங்குளிரவில்லையென்செய்வேன்
கோலமுறுமணவியிலேகிளைகளொடுசுகம்படைத்துக்குலாவுமெங்கள்
சோலைதனைச்சோமற்காமவிடாய்தணியாதேதோகைமாரே. ௨௯

பாலனிகர்மொழிமாதேயென்னிடத்திற் பூரணமாய் பட்சம்வைத் துக், காலமுகிலனையகரன்மணவியில்வாழ் சோலையெனுங்கன்னன்பாற் போய், மாலைகேண்மறுத்தாலென் மனத்தைக்கேண் மறுக்கின்மதன் வாராவண்ணம், ஓலைகேண்மறுத்தக்காற் கிள்ளாக்குக்கேள்வேறென் றேதிடாயே. ௩0

அரக்கனிலங்கையைவென்றோன்மருகன்றணிகேசனன்பர்பானஞ்
சிரக்கனலையாமனுனைக்காப்பானென்றனையடிதேமொழியேமாலை
வரக்கனலைமதிவீசப்படுமோவவ்வேளைதனில்வாதுக்கேம
துரக்கனலைமதப்பயலென்முனங்குனிக்கத்தருமோசொற்றோன்கநீயே.

என்னையவரமறந்தும்யானவரைமிகநினைந்திங்கிருந்துவாட
முன்னைவிதிப்படிதானோமுற்பிறப்பிற்செய்தவினைமுடிந்தவாறோ
கன்னனெங்கள்பிராமன்வரதுங்காமனியற்காசிகாட்டில்
அன்னவயற்குருகினங்காடனித்திருக்கமுடியாதென்றறைகுவீரே. ௩௩

தன்மனையிரதமாக்கித்தன்மகன்வலவனாக்கித்
தன்மகன்பேரனோடுதனக்குமைத்துனன்காலாக்கித்
தன்னனைநாரியாக்கித்தானுமோரம்புமானான்
தன்மனமிடங்கொண்டுய்த்தசங்கரன்றனக்குமாயன். ௩௩

முன்னொருநூறின்பேராமுதலெழுத்தில்லாவிட்டால்
நன்னகர்மன்னர்பேராநடுவெழுத்தில்லாவிட்டால்
கன்னமாமிருகத்தின்பேர்கடையெழுத்தில்லாவிட்டால்
உன்னியதேனின்பேராமூரின்பேர்விளம்புவீரே. ௫௪

(மதுரை-துரை-மரை-மது)

புதுவைமுத்துக்குமாரதொண்டன் றமிழ்போலக்கவிமதுரம்பொழியப்பாடும், சதுராருண்டோவெனவிரிஞ்சன்வினவினன் சேடனென்றானென்றானோர், பதமெனினுந்தோன்றுமன்மால்கொண்டு கடல்வீழ்ந்தான் பதுமன்சீறி, மதமுறுநாவைப்பிளந்து காதறுத்துமண்சுமக்க வைத்திட்டானே. ௫௫

மதுகரத்தையிகழ்ந்துருவில்வடிவேலர் தமையழைத்துவாரேனென்றே, இதமுரைத்துச்சென்றதென்னவின்னமுங்காணே னதனுகிரக்கமேது, சதமிதெனவளர்த்தெடுத்ததாய்க்குதவா தார்க்குதவுந் தத்தையேநீ, முதுமரைசேர் குமார்தமையழைத்துவா மதப்பயலேமுடுக்கத்தானே. ௫௬

குருமூர்த்தமாய்வந்துவினையொழித்துமுத்திதனைக்கொடுக்கத்தியாகர்
ஒருமூர்த்தியல்லாமன்மற்றுமொருமூர்த்திகளுமுண்டோநெஞ்சே
திரிமூர்த்தியென்பார்களவரவர்வாகனமேறிச்சேனிற்சும்மாய்
திரிமூர்த்தியல்லாமலொருமூர்த்தியுங்கதியிற்சேர்த்திடாரே. ௫௭

இருக்கோலமிடுங்கலைசைத்தெய்வசிகாமணிமுகில் வந்திணங்காநாளில், உருக்கோலவடிவானன்மைந்தனுமைத்தனனுநிதமோய்விலாமல், மருக்கோலஞ்செய்வதினும் வடவனலைச்சொரிவதினு மயக்கமுற்றுத், திருக்கோலங்கொண்டமகடயங்கு கின்றாண்மயங்குகின்றா டினமுந்தானே. ௫௮

முந்தனத்தைத்தூதுவிட்டேன் வரவுமில்லை மதராஜன்முனிந்தேவில்லாமல், எந்தனத்துக்கிலக்காகமலர்வாளியெய்கின்றா னினியென்செய்வேன், கந்தனத்தையகலாதபூம்பாவை வேலப்பன்கையாற்பூசுஞ், சந்தனத்தைசவ்வாதை நினைந்துமனதுருகுதடி தையலாளே. ௫௯

வெறிவிலக்கல்.

குருத்துக்கதலிப்பசுந்தேனையள்ளித்தராங்குகுட்டிக்
கருத்திக்களிக்குங்குறுங்குடிவாழ்தருமண்ணல்வெற்பின்

பருத்திப்பொதிக்கிட்டதீப்போலக்காமப்படைத்தவிந்த
ஒருத்திக்கொருவன்பகையோநடுச்சொல்லுமூரவரே. சo

தொட்டிக்கலை சுப்பிரமணிய தம்பிரான் வெண்பா.

வல்லவகுளத்திருக்குமன்னவாவாசமலி
நல்லவகுளத்திருக்குநாதனே-மெல்ல
வடிவாளைக்கொண்டமணவாளாகணிச்சி
வடிவாளைக்கொண்டெண்ணிடர்மாற்று. சக

(குளத்திருக்குநெற்றிக்கண்.)

கட்டளைக் கலித்துறை.

பொன்முகநோக்கிநின்றன்முகநோக்குமுன்போயினளொன்
றன்னிடவீழ்ந்தனள்கைதொடவுய்ந்தனளுன்னுடனே
பின்னும்புணர்ந்திடமுன்னறிவுற்றிடபெற்றபிறப்
பெண்ணலமென்றனளோரகத்தான்மலையீர்ங்கொடியே. சஉ

ஒட்டக்கூத்தர்.

தற்கோலிப்பாசப்பூசற்கேதட்டாமற்சாகைக்கேகிற்பீர்
முற்கோலிக்கோலிப்பூசித்தேமுட்டாமற்சேவித்தேகிற்பீர்
வற்றாநெட்டோடைப்பாரச்சேன்மைப்பூகத்தேறித்தாவிப்போய்
நெற்றூறுற்றாலைப்பாகிற்சேர்நெய்த்தானத்தானைத்யானித்தே. சங

புகழேந்தி.

விக்காவுக்காவித்தாவிப்போய்விட்டானட்டார்சுட்டேர்புக்கார்
இக்காயத்தாசைப்பாடுற்றேயிற்றேடிப்போய்வைப்பீர்கிற்பீர்
அக்காடப்பேய்தொக்காடச்சூழப்பாடத்தீவெப்பாடப்பூண்
கெக்காடக்கானத்தாடப்போநெய்த்தானத்தானைத்யானித்தே. சச

ஆக செய்யுள்-கூருஉ.

---

## இப்பதிப்பில் நூதனமாகச்சேர்த்த

### பலவித்வான்கள் பாடியபாடல்கள்.

கலித்துறை.

நீத்தாவறிஞர்பிணியாளர்கல்விநெறியறியார்
பூத்தாரமஞ்சிவிருந்தொளிப்பார்பொருட்கேகிளை

யூர்க்கேதசுமைசுமந்துண்போரிவர்களுயிரிருந்து
வீந்தாரிவரைவர்காண்செழியாதிருவேங்கடமே. க

கொடுத்தாலிகாக்கின்றகாவேரிவற்றிக்குறைந்திடினு
மடுத்தோண்டிநீருண்ணுவாரதுபோலிந்தமாணிலத்தி
லடுத்தாரைரட்சிக்குந்தாதாவென்பார்க்கடையாளம்பிச்சை
யெடுத்தாகினுங்கொடுப்பார்வெள்ளைநாவலிருப்பவனே. உ

வெண்பா.

மாமிக்கோர்மாமியுண்டுவாணருக்கோர்வாணருண்டு
சாமிக்குமேற்றகப்பன்சாமியுண்டு-பூமிக்குள்
எல்லாந்தெரிந்தவருமில்லைதெரியாதவரு
மல்லாமற்கண்டவர்களார். ங

ஆங்காலமெய்வருந்தவேண்டாமதுவன்றித்
தேங்காய்க்கிளநீர்போற்சேருமே-போங்காலை
காட்டானைதின்றகனியதுபோலாகுமே
தேட்டாளன்தேடுந்தனம். ச

சொல்லிச்செய்யார்பெரியோர்சொல்லிச்செய்வார்சிறியோர்
சொல்லியுஞ்செய்யாதவர்கசடர்-சொல்லுங்கால்
குலாமாலைவேற்கட்குறிப்பறிந்துபார்க்கிற்
பலாமாநற்பாதிரியைப்பார். ரு

கலித்துறை.

முற்றாததில்லையும்வாசமுமுள்ளுமுனையுமெவர்
சற்றாகிலுஞ்செய்துவைத்ததுண்டோவன்புஞ்சர்க்குணமும்
பெற்றார்பிறவிக்குணங்காணதுகண்டுபேதையர்கள்
கற்றால்வராதுகண்டாய்கச்சிமாநகர்க்காவலனே. சு

வெண்பா.

மிக்குப்பெருகிபுமிகுபுனல்பாய்ந்தாலும்
உப்பொழிதல்செல்லாவொலிகடல்போல்-மிக்க
இனநலநன்குடையராயினுமென்று
மனநலமாகவாங்கீழ். எ

உடைப்பெருஞ்செல்வத்துயர்ந்தபெருமை
அடக்கமில்நெஞ்சத்திறடு-நடக்கையின்

ஒள்ளியனல்லான்மேல்வைத்தல்குரங்கின்கைக்
கொள்ளிகொடுத்துவிடல். ௮

சுத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமில்லையேயில்லையாகும்
சத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமெய்திடிலெய்துமன்றே. ௬

கதிரவனிலையேற்கண்ணிற்காண்பனமறையுமாபோல்
நிதியமொன்றிலையேலியார்க்குநீதிமான்ஞானபோதம்
துதிபெறுகீர்த்தியாண்மைச்சூழ்ச்சிமந்திரவிசாரம்
சதிரபிமானமெல்லாந்தன்னிலேமறைந்துபோமால். ௧0

கலித்துறை.

பாலுக்குச்சர்க்கரையில்லையென்பார்க்கும்பருக்கையற்ற
கூழுக்குப்போடவுப்பில்லையென்பார்க்குங்குத்தித்தைத்த
காலுக்குத்தோற்செருப்பில்லையென்பார்க்குங்கனத்ததண்டி
மேலுக்குப்பஞ்சணையில்லையென்பார்க்கும்விசனமொன்றே. ௧௧

மேவுமெண்போகம்விளம்பில்பெண்ணுடைவியன்கலன்பாற்
றூவியம்போசனந்தாம்பூலம்வீசுசுகந்தமன்பி
னுவெழிற்பாட்டலர்மெல்லணையாமிவைநன்கமைந்த
வாவிக்கடவுளருட்பாழிபெற்றவரசிடமே. ௧௨

வெண்பா.

எண்கோவைமேகலைக்காஞ்சியிருகோவை
கண்கோள்கலாபமிருபத்தொன்று-பண்கோள்
பருமம்பதின்மூன்றுமுப்பத்திரண்டு
விரிசிகையென்றுணரப்பாற்று. ௧௩

மன்னவன்குணங்கொடிதெனவருத்தலுமதற்குத்
துன்னுபைங்கொடியடுத்தகொம்பதனையேசூழும்
கன்னிமாதருமன்னருந்தங்களைக்காத்தே
பண்ணுமிங்கிதஞ்செயுமவர்பாற்செய்வர்பரிவு. ௧௪

பாவிகளகத்தைப்போலும்பலவிரதியர்கள்போலும்
ஒவருசகாயர்போலுமுறைமுறைசுற்றம்போலும்

மேவுவரவரைச்சேரின்மேன்மைபரேனுமுய்யார்
பூவையுமுயலுமுன்னோர்ப்பூனையைச்சேர்ந்தவாறே. ௧௫

வேந்தருங்கொடுந்தீயும்வெவ்விடம்பொழிபகுவாய்
பாந்தளுஞ்சலியாதலினன்னவன்பக்கல்
போந்துநண்புகொண்டடவிநீபுரக்குமாறென்னும்
மோந்திடும்படிக்கடிப்பதுமன்னர்தம்முறையே. ௧௬

ஒருவருக்கமுதளித்தாலுண்பனேனுலகமாளு
மிருவருக்கமுதளித்தாலிந்திரன்பதவிசேர்வார்
மருவியபூசைசெய்துவந்தவரிளப்பையாற்றில்
திருமடவன்னதானஞ்சிவாலயமாகுந்தானே. ௧௭

வெண்பா.

அருக்கனையுஞ்சோமனையுமைம்மூன்றுநாளதனிற்
பெருக்கவரவந்தீண்டிற்பேசுங்கால்-செருக்களத்தின்
மன்னர்மடிவார்மடிவாரேயாமாகில்
அன்னமரிதாய்விடும். ௧௮

பரிதியும்பஞ்சமாகிற்பார்மதிவெள்ளமாகுங்
குரிதியுங்கூச்சலாகுங்கொடும்புதன்காற்றதாகும்
பெருத்ததோர்வியாழம்வெள்ளிப்போகமேறவிற்குங்
கருத்ததோர்சனியுமாகிற்கலகமும்பற்றறுதே. ௧௯

வெண்பா.

கல்லாடர்செய்பநுவல்கல்லாடம்நூறுநூல்
வல்லார்சங்கத்தில்வந்தருளிச்-சொல்லாடா
மாமதுரையீசர்மனமுவந்துகேட்டுமுடித்
தாமசைத்தார்நூறுதரம். ௨௦

இடுகாட்டுமங்கையெலும்பிற்புரண்மால்
சுடுகாட்டிலாடுவார்சுட்டிஞெடுகொட்டுஞ்
சம்பந்தாயென்புநின்பாறந்தாக்கிக்கொண்டிலனே
கும்பந்தானென்னுமுலைக்கொம்பு. ௨௧

கலித்துறை.

அரியெச்சில்போலவரவெச்சிலுமஞ்சரியெச்சிலும்
எரியெச்சிலேழுமுனியெச்சிலும்போரவேந்திழையாள்

கரியெச்சில்போன்றனள்விக்கிரமச்சோழன்கனைத்தகன்றின்
புரியெச்சிலுண்டபுயல்வண்ணனெச்சிற்புரந்தரனே. உஉ

வாக்குமனமுமுடையானென்னார்தம்மிமுடிநீ
ராக்குந்திறமையிருங்கோளன்வெற்பிலயனடுக்கம்
போக்கும்புனிதனுங்கந்தனுமாலும்புரந்தரனும்
நாக்குங்கழுத்துந்தலையுமில்லான்பகைநானல்லவே. உங

காயுங்கரடுஞ்சுரமீதென்றுகாட்டியகையுஞ்சொன்ன
வாயும்புகையெழும்பாலையிலேமணிமாமகுடம்
தோயும்புகழ்ச்சச்சிசுந்தரபாண்டியன்தோகைவெற்பில்
தாயுந்தமருமில்லானிங்ஙனேநின்றதார்குழலே. உச

ஆக செய்யுள்-கூஎசு.

## கடிகைமுத்துப்புலவர் பாடிய

### மடக்கு.

கருப்பஞ்சிலையுமோர்கரமே-கண்டேனுஞ்சூகரமே
காமப்பயனுமோர்க்கரமே-கணையைத்தொடுப்பான்சீக்கரமே
வருத்தம்புரிவாரனேகரமே-வல்லார்மடவார்நிசகரமே
மாமால்வெங்கடேசரெட்டன்வருவான்வருவானென்றிருந்தேன்
திருத்தும்படிக்குமனோகரமேசெய்தானினித்திவாகரமே
தினியில்வருவாயெனக்கரமேதெரியவுதித்தான்சக்கரமே
பொருத்தந்தருகண்ணுகரமேபோர்வேட்கிலவீராகரமே
பூவைமாருஞ்சேகரமேபுகழ்ந்தேன்ரத்தினகரமே. க

கையான்முகத்தைத்துடைத்துமலர்க்கண்ணுலெனையும்பார்த்துமலர்க்
காலால்வண்டுகுடைந்தமலர்க்கணியையெனதுகுழற்கணிந்து
மெய்யானதையேதடவியென்றன்மேலேயிலங்குமுடைமையெல்லாம்
வெவ்வேறுகக்களைந்ததனைமீட்டுநிறையாத்தரித்துமங்கே
நையாவிடையைத்துகிலாலேநன்றுப்பொதிந்துமனம்விரும்பி
நகைத்தான்வெங்கடேசுரெட்டன்நானுமகிழ்ந்தவனைப்பார்த்தேன்

பூமன்னவரைநிகருரையாப்பூமான் வெங்கடேசரெட்டன்
புகழ்சேர்செட்டிப்புரத்தழைக்கப்புருகூதனைப்போல்வரக்கண்டேன்
சோமன்றனக்குமாமனையே துணையாயிருக்குமாமனையே
குழும்புவிக்குள்வளைபட்டே துடித்தேன்மதனல்வளைபட்டேன்
ஆமன்மதன்சேர்வைப்பறையே ஆரமணிசேர்வைப்பறையே
ஆழியிலையாப்பயனிலையே அன்னையா லம்பயனிலையே. ௧௪

கடலுக்குத்தனிக்குஞ்சிலேடை-மடக்கு.

மச்சங்கடக்கவடக்காக்கொங்கைக்கும்பசலைபொருந்தியனங்
கைக்கும்படிக்குமிருந் துயடல்கைக்குந்தரிக்கவெண்ணிமதி
உச்சம்பார்க்குமடவார்கள்உள்ளங்கவரக்காமனைப்போல் [லே
உதித்தோன்வெங்கடேசரெட்டன்உலாவப்பார்த்தேன்பெருங்கட
அச்சங்கூருமுன்னிடத்தில் ஆச்சங்கூருமென்னிடத்தில்
அம்பாலசைவாய்நீயுமதன் அம்பாலசையுமெனக்குண்டே
மச்சங்கடவா துன்னையுங்காமச்சங்கடவாதெனக்குமுண்டாம்
வணங்காரருமுனக்கெனக்கும்வணங்காரருஞ்சிலதியரே. ௧௫

மடக்கு.

வருந்துஞ்சனகிமுகம்பார்த் துவரிவிற்பலத்தைப்பின்பார்த்து
மணக்கோலஞ்செய்திருந்தவன்வேள்மணக்கோலஞ்செய்ததைப்பா
ரான், திருந் துவளையும்போச்சேனவேதெரிவைமா தர்மயலாகுஞ்
செயவேள்வெங்கடேசரெட்டதீரனிசைக்கடற்றுறைவாய்
இருந்திடனைக்காவேளன்னைத்திடனைக்காவே
ஏற்றதாலத்திடந்தாரேவகந்தாலத்திடந்தாரே
பொருந்துமணிவின்வாய்த்திட்டே பொருப்பேறுதாய்வாய்த்திட்டே
புதிதாமதியாகந்தினமேபொருகாமதியாகந்தினமே. ௧௬

மடக்கு.

காரியனையகொடைக்குமுபகாரிதம்பாராட்டும்விப
காரிமதியோசனையாலுங்காரியகருமப்பகர்வோன்
வேரிவனசத்திருமாதைவிழியுளிருத்திப்பகையனைத்தும் [வாய்
வென்றோன்வெங்கடேசரெட்டன்மேவுமிசைக்கக்கடற்றுறை
வாரிமுகட்டிலெழுகலமேவளைபோனதுவுமெழுகலமே
வந்தால்வருமீசரப்பாறேமேயுமெனக்குஞ்சரப்பாறே
நீர்நிறைமீன்புலவேகெடுகொட்செலுமோகான்புலவே
நெய்தற்படருங்கொடியாரே நேயரனமார்கொடியாரே. ௧௭

## பின்முடுகு வெண்பா.

மடக்கு.

கனத்துப்புடைத்துப்பருத்துவிம்மிக்காம்புதிரண்டுகண்கறுத்துக்
காமன்மகுடம்போற்பாக்குகச்சுக்கடங்காக்கனதனத்தார்
மனத்துக்கிலேசத்தவழ்வழுகன்மதவேள்வெங்கடேசரெட்டன்
வலைவரைகநிடும்வைப்பாறும்வந்துபொருதுங்கடற்றுறையே
உனக்குமேவாசஞ்சலமேயென்னத்துளவாசஞ்சலமே
ஒழியாதுப்புமயக்கமேயெண்டேதுப்புமயக்கமே
இனத்துமோதுவரியாரேதெரிக்குமோதுவரியாரே
தேனுக்கோடமலைத்தேதினைகித்தங்கோடமலைத்தேனே. ௧௨

பாட்டுடைத்தலைவன் குணத்துக்கும்
கடலுக்குஞ்சிலேடை.

மடக்கு.

தெரியவமுதம்பழுதுமதிதெரிக்குவாரம்பிரியாமற்
றீரத்திடமுமீக்காமற்செழிக்கவாய்மைகடவாமல்
வரிசைபுரிந்துதமிழ்ப்புலியவங்கேதன்வெங்கடேசரெட்டன்
மனதுநிறையுங்குணம்போலவனதும்பெரியகடற்றுறைவாய்ப்
பெரியமீனைசினக்கயலேபெண்பாலெனுமெனக்கயலே
பெருகுந்திரையிற்செல்லீரேபிழைக்கத்தூதுசெல்லீரே
அரிவின்மலைமேற்றடவிலேயமைத்தாசெவருமுடலிலேயே [டே
ஆரணர்க்குரித்தாங்கலைக்கூடேயறுகேன்மலர்த்தாங்கலைக்கூ

ஆக-செய்யுள்-௧௩௫.

---

## பின்முடுகுவெண்பாவும்-வெண்டுறையும்.

கல்விக்குஞானக்கருத்துண்டாங்காயமுறும்
தொல்வினைகளெல்லாந்தொலைமே-வில்லிலக
விற்புயற்றிருக்கணத்தனித்தன்வச்சிரப்புயத்தோர்
கற்பகத்திலைத்துதித்தக்கால். ௧

இக்குலத்திருஞ்செய்கருமக்கைகூடும்
சக்காணமென்றக்தழைத்தேதறம்-பைந்தாமத்
தானைவயத்தானைமலைப்பாவையளித்தனைமகத்
தானைமுகத்தானைநினைத்தால். ௨

செல்வம்பெறலாஞ்செழித்தபுகழ்சேரலாம்
வில்வம்புனைவார்விரிஞ்சேசர்-புல்லுமதன்

கோளைமுடித் தாரிமையக்கோதையிடத்தார் கமலத்
தாளைமனத் தூடிவினைத் தால். ௩

அண்டர் தமக்கரசாமன்புபடாக்கொம்பாம்
மண்டவுணர் தம்முயிர்க்குவன்னியாம்-பண்டுதிறற்
கஞ்சனஞ்சிடுங்கடம்பணிக்கெழுந் தகத்தாரை
பிஞ்சிகெஞ்சநிக்கெழுந்தவேல். ௪

ஆதாரவென்னருகிலைந்தவென்றுவக் துநின்று
போதரவுசெய்யுமெய்ப்போதமே-ஓதுதமிழ்ச்
சந்ததமுந் தலங்கிர் தஞ்செறிந் துகன் குமார்ந் துதவு
சிந்தைகொண்டிலங்குசெந்தில்வேல். ௫

இவ்விதமாகல்வாழ்வெமக்களிக்குமுற்பகல்செய்
சங்கடமாம்வேலைதணிக்குமே-பொங்கமுறத்
தற்பார்க்கனுக்ரகித்திடக்கருத்தனித்தசத்த
வெற்பினைத்துளைத்தவுக்ரவேல். ௬

நட்டும்வினைகளாறத்தின்பமுறவேயெனது
பாட்டுக்குகந்தருள்பாலிக்குமே-காட்டம்பிறும்
மண்டலங்கலங்கவண்டர்கண்டர் துண்டர்மிண்டராவி
விண்டொடுங்கமண்டியுண்டவேல். ௭

உன்னவினிதாயிருக்குமோங்குசெல்வமும்பெருக்கும்
கன்னலருளைக்கொடுக்குநாடோறும்-பன்னும்
சகடமுருளநெருடுகமலசரணகருணையரியின்மருகன்
விகடகரியினிளையமுருகன்வேல். ௮

ஊழ்வினையைப்போக்குமேயுள்ளொளியைக்காட்டுமே
வாழ்வதற்கோர்வித்தாய்வளருமே-தாழ்வார்
தடபடவெனவதிர்கடலதின்முடிமிசை
விடவதிபொடிசெயும்வேல். ௯

ஓராருசென்னியொருமுருகாவென்றளவில்
தீராதவல்வினைநோய்தீருமே-போராடிக்
கொக்கரித்துவெற்படர்த்துக்கொக்கரக்கனைத்துணித்த
விக்ரமத்திருக்கரத்துவேல். ௧௦

கந்தாகடம்பாகயிலாயமாமலையான்
மைந்தாசுவாமிவடிவேலா-சந்தச்

குறமகளாசைகொள்கணவாகுருபரனாகியகுமரா
அறுமுகவாபழனியின்வேலா. ௧௧

அன்பர்பயங்கெடுக்குமத்திகிரியைத்துளைக்கும்
இன்பவல்லிகண்ணுக்கெதிராகும்-மின்பரந்த
வாகுதோளிலேறிமீறிவாகுசாரியோடியாடி
வேகசூரன்மார்பிளந்தவேல். ௧௨

அஞ்சிமயல்சகியாதங்கமுருகிநின்ற
வஞ்சியைச்சேர்தென்றணிகைவள்ளலே-பஞ்சமலர்
அங்கசனுக்குங்கிரணத்தந்திமதிக்குங்கடலுக்
குங்குழலுக்குங்குயிலுக்கும். ௧௩

வாங்குசிலைநுதலார்மாயக்கலவியிலே
ஏங்கிமனமேயிளையாதே-மாங்கனிக்காத்
தம்பியொக்கச்சண்டையிட்டுத்தந்தையைச்சுற்றந்தவொற்றைக்
கொம்பனைச்சற்றன்புவைத்துக்கூறு. ௧௪

தாமரைப்பூந்தேனையுண்டுதாதளைந்துவண்டிமிர்ந்து
காமரஞ்செய்வாவிகள்சூழ்கந்தர்சிவ-மாமலைவாழ்
பூவையரங்கத்தங்கம்பூகமிலங்குங்கண்டம்
காவையரங்கஞ்சங்கண்காண். ௧௫

வந்துமழைபொழியும்வானேவெஞ்சூர்தடிந்த
கந்தர்திருவிழாக்காலத்தில்-தொந்தரையா
நீர்த்துளியையூற்றிவிடனேர்த்தியலமாற்றிவிடு
கீர்த்திவருநாட்டென்மொழிகேள். ௧௬

போற்றுவார்வல்வினையைப்போக்குமேபூமலர்கொண்
டேற்றுவாரைக்கயிலையேற்றுமே-தோற்றரிய
சந்தந்தங்குஞ்செஞ்சொற்சங்கம்பொங்குஞ்செந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக்கால். ௧௭

ஆறுமுகமென்றளவிலச்சந்தவிர்க்குமே
வேறுவினைவந்தால்விலக்குமே-கூறுபுகழ்
மாரியொத்தசூரபத்மன்மார்பிளக்கவேதொடுத்த
வீரசத்தியான்மிகுத்தவேல். ௧௮

வேலாவிராலிமலைவீராவுனக்கொருபெண்
மாலாகியேநின்றுவாடுகிறாள்-நீலான

உம்பலக்கயற்கணிச்சியுத்தரித்திடச்சமர்த்தி
அற்பசிற்றிடைக்கொடிச்சியாள். கசு

கந்தனென்றும்வேலனென்றுங்கானமயில்வீரனென்றும்
செந்தனென்றுமேன்புலவீர்செப்புகிறீர்-முந்தவிளங்
கூனற்பிறைசூடச்சிவனுருக்குபதேசித்தருள்
ஞானக்குருவ்வடப்பயலை. உ0

பன்னிரண்டுதோளாபரங்குன்றுவெப்பொழுதும்
என்னிரண்டுதோண்மீதிலேயிருப்பாய்-பொன்னின்
கதிர்முடியப்பாகுகிடக்கணவரையப்பாபழனிக்
கதிபதியப்பாகுமரப்பா. உக

நோகாதோவேலாநீநோக்குமடமானுக்காப்
போகாவனந்தேடிப்போனக்கால்-வாகாத்
தினநினைந்திட்டுனைவணங்கித்திரியுமன்பர்க்கருள்செயும்பொற்
கனகதண்டைச்சிறுசதங்கைக்கால். உஉ

வாரீர்பழனிவடிவேலரேகடம்பைத்
தாரீரென்சிந்தையினிற்றானுறையீர்-சேர்நீர்
கன்றுநஞ்சுபிஞ்சுமஞ்சுகண்களுஞ்சிவந்துபொங்க
என்றனங்களுங்கசங்கவே. உஙு

மேகநிறமான்மருகவீறுதணிகேசவிது
வாகடினமேவுமிவளாவியருள்-வாகுவளை
நத்தத்தத்திற்பற்றிநச்சுப்பைகுட்டத்து
நிர்த்தத்திற்கிச்சித்தநீர். உச

பூவைக்குநண்ணுபகற்போதுகமதாமெலிந்தாள்
வாவிக்கவின்றணிகைவாழ்குமரா-பாவிமதன்
அம்புரம்புகுந்தலைக்கவம்பகந்தணந்தெறிக்க
வெம்பிநெஞ்சமுந்திகைக்கவே. உரு

அம்பிறைக்குமைந்துமலரம்பிறைக்குநொந்துமிக
அம்பிறைக்குங்கண்ணாட்கருள்புரிவாய்-நம்புதணி
கைக்கிரிக்குளுற்றசித்ரகச்சுடைத்தனக்குறத்தி
யைக்களித்தணைத்தவத்தனே. உசு

என்னிடத்திலேகுமராவெண்ணாதேபேதகமா
உன்னிடத்திற்கொண்டமயற்கோதாயோ-துன்னிரவு

செல்லாப்பகட்டுமென்கண்செல்லாப்புரட்டுமெங்கம்
பொல்லாப்பரத்தைவஞ்சிபோல். ௨௭

செங்கமலக்கண்கலங்கிச்சிந்தைநொந்திராமுழுதும்
வெங்கலைக்குஞ்சங்கலைக்கும்வேலவனே-அங்கசன்றன்
பூங்கணைமெத்தத்தைத்துப்பூங்கொடிகத்திப்பட்டுத்
தாங்கணைமெத்தத்தைத்துத்தான். ௨௮

சங்கநிதியேரகம்வாழ்சண்முகனேநின்மோக
மங்கையெழின்மேனிகளம்வண்மருங்கு-கொங்கைசெங்கண்
கந்தந்தங்கந்தங்கங்கம்பந்தந்தந்தம்
பந்தந்தந்தண்கஞ்சம்பார். ௨௯

நீமருவவாமுருகாநித்திலங்களுஞ்சிந்தக்
காமருதேன்பூட்டிநெடுங்கன்னல்வளைத்-தேமதனன்
வண்டுவரக்கண்டுளறிவண்டுமதியும்பரிபோய்
வண்டுவரவாய்புலம்புவாள். ௩0

நாறுமுகமாய்ப்புகழ்ந்துநாறுயிரம்பேர்தம்
வேறுமுகம்பார்த்திருக்கவேண்டாமே-ஆறுமுகச்
சுத்தனைச்சித்தத்துவைத்துச்சொற்றமிழ்ச்சித்ரக்கவிக்குட்
கத்தனைச்சற்றுதித்தக்கால். ௩௧

பங்கயக்கண்வேலவனேபைந்தொடியாடேடிநித
மங்கிமிகவுந்தளர்ந்துவாடுகிறாள்-செங்கைமலர்
அன்னநடைமின்னலொளிசின்னவிடைவன்னமுலை
கன்னன்மொழிமன்னுமிவள்காண். ௩௨

எத்திக்கும்போற்றுமிவளையெழிற்குமரா
தித்திக்குநின்கனிவாய்த்தேனூறன்-முத்தமிட்டுச்
சித்திரச்செப்புத்தனத்தைச்சிக்கெனக்கட்டிப்பிடித்துச்
சித்தமொத்துப்பொற்பதத்திற்சேர். ௩௩

வேலவர்தானேற்றணைந்தவிந்தையைநானேதுசொல்வேன்
கோலவடமோசையிடக்கொம்பனையே-சீலமுடன்
கட்டிமுத்தமிட்டணைத்துக்கட்டிமைக்கணைச்சுவைத்து
மெட்டினைப்பதத்திலிட்டுமேல். ௩௪

வேலவனேநின்கலவிவிந்தையதற்கேற்றமங்கை
கோலவரிக்கண்சுழற்றிக்கொஞ்சுகிளி-போலமுலைக்
கச்சுக்குட்சிக்கச்சொக்கப்பொற்சுட்டிக்கட்டிப்
பச்சைப்பொட்டிட்டத்தைப்பார் ௩[illegible]

ஏவிழியார்மூரலிளநிலாக்கண்டுகருங்
காவிமுகையவிழுங்காஞ்சியே-மேவலரூர்ச்
சக்கரக்கரக்குதைக்கதக்கணக்கிலக்கெனக்கொள்
நக்கரக்கரக்கணக்கர்நாடு. ௩௬

நாலாநாள்சேர்ந்தணைந்தநன்னயத்தையெண்ணிமெத்த
மாலானுள்வேலவனேமாரனெய்யும்-கோலாலே
வண்டுகுடியானகுழல்வஞ்சியெனமோபயந்து
வண்டுகுடியாண்மருவவா. ௩௭

வானுதித்தமாமதிக்கும்வாரிவிட்டவேள்கணைக்கும்
மீனுதித்தவாரிதிக்குமேதினிக்குள்-நானொருத்தி
சிந்தைவாடிநொந்தசேதிசெங்கைவேலர்பங்கிலோடி
மந்தமாருதஞ்சொலோதுமா. ௩௮

செந்தழல்போல்வீசுதினிச்சேர்ந்தணைவாய்வேலவனே
கந்தமலர்ச்சோலைவண்டுங்கார்க்குயிலுந்-தொந்தமுடன்
பாடுவதும்புந்தும்பும்பார்மதனுந்தும்வந்துஞ்
சாடுதுவம்புந்தும்பிந்தா. ௩௯

வாகந்தாவல்லவென்றால்வாகந்தாராகிலுந்தா
சோகந்தான்மீறிவளைத்தோய்ந்திடவே-நாகஞ்சேர்
மாலையிந்துசோலைவண்டுமாரனம்புசூழநொந்திவ்
வேழைநெஞ்சமேகலங்கினள். ௪0

பாகாருமின்சொல்வள்ளிபாகாதேவேந்த்ரனருள்
வாகானகுஞ்சரிவிவாகாநீ-யேகாவல்
என்றுநம்புமென்றனொந்தசிந்தையன்புபொங்கவந்து
நின்றுகொண்டிரங்குகந்தனே. ௪௧

வாதாவுன்னுனுநடவாதாவோராறிரண்டு
காதாவுன்சித்தமிரங்காதா-நீதாவென்
சிந்தைக்கிசைந்தபடிசெஞ்சொற்கிரங்கியருள்
கந்தப்ரசண்டமுருகா. ௪௨

வந்தனையாவென்றுதுயர்மாற்றிமனவேட்கையெல்லாம்
வந்தனையாத்தந்தருளுமாதவா-பந்தனைய
கொங்கைகுறமங்கையொடுகுஞ்சரிபுயந்தழுவு
கங்கையுமைமைந்தமுருகா. ௪௩

உன்மனது மென்மனது மோர்மனதா னென்றிடினே
மன்மதனும் வில்லெடுக்க மாட்டானே—என்மதிதேய்
குன்றடர்த்துப் பந்தையென்று கொம்படைந்த தும்பிருந்த
வென்றடைந்த கொங்கைமங்கையே. ருஉ

சித்தமுறியினைத் திரவிளித்திசைபயற்றருசி
சித்தசனெடுத்துவருபுத்தகவினை—முத்துருசி
மெத்தமயலுற்றபிரபித்துறலைசற்றுறதி
தத்தைதயொருமுத்தமதுதா. ருங

வேலோகடலோவிடமோகருவண்டோ
சேலோகணையோவிறைவரோ—சோலையுடன்
தண்டலைக்குத்தண்ணருளாத்தத்திவிழக்குத்துமூலைக்
கண்டலிங்காரிகைக்கண். ருச

நீலமோவேலோநெடுங்கயலோவாரிதிசேர்
ஆலமோவம்புயமோவைங்கணையோ—நீலநிற
வாவிச்சேலைக்கருங்கல்வைந்துபுனலாடுகின்ற
காவிச்சேலைக்காரிக்கண். ருரு

சேலோகணையோபிணையோகற்றென்னவன்கை
வேலோகயமோமிளிர்வண்டோ—சால
பளபளென்றுவொளியிருந்துபவளமிஞ்சிகைபுனைந்த
ளபரும்பமுலைமடந்தைகண். ருசு

முக்கனியிதழ்க்கொடடாமுற்கதிரைவிற்குமார
விக்கறைறபிக்கவினியிக்கமுது—சர்க்கரைரு
சிக்கிலைகசக்குதுசிக்கலையுதிக்கிலதின்
அக்கரைபயக்குமடடா. ருஎ

ஆரார்பொறுப்பார்சொல்லாதித்தாவஞ்சியன்றே
சோராபராஜசேகரா—நேரே
சினத்துவட்டமிட்டுச்செப்பெனப்பலைத்துதித்தபொற்
றனத்திலிட்டமுத்துவெக்கைதான். ருஅ

இந்நேரமீயவளையின்பமணமேபுரிவாய்
தன்னேராருதைசலதுரையே—மன்றுமதன்
பூவினம்பையேவகின்றுபோர்செய்கின்றதான்மெலிந்து
காவியங்கண்ணாள்கலங்கினாள். ருக

